இலந்தைக்கனி தாபதக்கனி தவிர ஏனைய வாழைக்கனி முதலி யவற்றினையும், "ఫలం" மாணிக்கமுதலிய மணிகளையும், "క్షౌమం' நார்ச்சீலை, பருத்தியாடை, செவ்வாடை முதலிய வற்றையும், "సోమః" = சோமக்கொடியையும், "మనుష్యః" = ஆண், பெண், அலியராகிய அடிமைகளையும், "అపూపం" = அதிரச முதலிய தின் பண்டங்களையும், "వీరుధః"=பிரம்பு, சிந்தில்முதலியகொடி வகைகளையும், "తిలాః" எள்ளினையும், "ఓదనం" = சோற்றினை யும், "రసః" = வெல்லம், சருக்கரை, கருப்பஞ்சாறு முதலிய வற்றினையும், "క్షారః" = யவாசாரம், சத்திசாரம், வெண்கார முதலியவற்றினையும், "దధి" = தயிரையும், "క్షీరం" = பாலி னையும், உபலங்கணத்தால் பாலேடு – தயிர்க்கட்டிமுதலியபால், தயிர்ச் சிதைவுகளையும் "ఘృతం" = நெய்யையும், உபலக்கணத் தால் எண்ணெய் முதலிய சிக்குப் பண்டங்களையும், "జలం" = நீரையும், "శస్త్రం" = வாள்முதலிய ஆயுதங்களையும் "ఆసవం"= கள்ளையும், "మధూచ్ఛిష్టం" = மெழுக்கினையும், "మధు" = தேனை யும், "లాక్షా" = அரக்கினையும், = "బర్హిః" = தருப்பையையும், "మృత్" = மண்ணினையும், "చర్మ" = தோலினையும், "పుష్పం" மலர்களையும், "కుతపః" = கம்பளங்களையும், "కేశాః" = சாமரை கவரிகண் முதலியவற்றினையும் "తక్రం = ఉదస్విత్" = மோரினையும், "విషం" = சிங்கிமுதலிய விடத்தினையும், (எனவே வசநாபிமுதலியன) "క్షితిః" = நிலத்தினையும், "కౌశేయం"= கோசத்தாற் பிறந்தது = பட்டுகளையும், "నీలం" = நீலத்தினை யும், "లవణం" = ஐவகைஉப்புகளையும், "మాంసం" = ஊனையும், "ఏకశఫః" = குதிரை, கழுதை முதலியவற்றினையும், "సీసం"= ஈயமுதலிய வுலோகங்களையும், "శాకం" = காய்கறி வகைகளை யும், "ఆర్ద్రౌషధీ" =பச்சைப் பயற்றினையும், "పిణ్యాకం" = இலைக் கறிகளையும், "పశుః" = காட்டுப் பசுக்களையும், "గంధాః" = சந் தனம் அகில்முதலிய வற்றினையும், வைசிய விருத்தியாற் பிழைக் கவேண்டினவனும் எப்பொழுதும் விற்றலாகாது. அவற்றுள், அரக்கு, உப்பு, ஊன் இம்மூன்றனையும் விற்றவனை; அவை யப் பொழுதே நிலைமை கெடுத்து விடுகின்றன. பால், தயிர், கள், இம்மூன்றும் விற்றவனையுடனே தாழ்ந்தசாதியா ளாக்குகின்றன. ஏறு. என்னெனில்? ஈனசாதி சூத்திரன் என்பது.

அற்றன்று. இந்தயாஞ்ஞவற்கியவுரை ஆபத்து இல்லாதவேதியன்விற்றலாகாதென்று கூறியதன்றிச் சூத்திரனைப் பற்றிக்கூறியதல்லவா மாதலின் மனுவுங்கூறினர். మనుః॥ "సద్యః పతతిమాంసేన లాక్షయాలవణేనచ। త్ర్యహేణశూద్రీభవతిబ్రాహ్మణఃక్షీరవిక్రయీ। శూద్రస్తులవణాదీని విక్రీణన్నహీయతే" = ஊன், அரக்கு, உப்பு, இவைகளைவிற்ற வேதியன் முழுவதும் பிரஷ்டனே யாகின்றான். வேதியன் மூன்றுநாள் பால்விற்றால் சூத்திரனேயாகின்றான். உப்புமுதலியவற்றினைச்சூத்திரன் விற்றாற்குற்ற முடையவ னாவதில்லை. எ-று. காண்க. [பால்விற்ற வேதியன் மூன்றுநாள்வரையிற் சூத்திரனாக விருக்கின்றான் என்பது சிலர் கருத்து.

## சூத்திரன் வாணிபம்.

ஏவற்பணியால் பிழைப்பதற்குச் சத்தியில்லாத சூத்திரனுக்கு யாஞ்ஞவற்கியர் வாணிபத்தை விதித்தனர். యాజ్ఞవల్క్యః॥ "శూద్రస్యద్విజశుశ్రూషా తయాజీవన్వణిగ్భవేత్। శిల్పైర్వావివిధైర్జీవేత్ ద్విజాతిహితమాచరన్" = சூத்திரனுக்கு வேதியன் பணிசெய்வதே தருமம். அதனால் பிழைக்கமாட்டாதவன் வாணிகஞ்செய்யலாம். எந்தத் தொழிலால் இருபிறப்பாளர் ஏவலைத்தான் செய்யக்கூடுமோ? அப்படிப்பட்ட பல சிற்பத்தொழிலாலாயினும் பிழைக்கலாம். எ-று. காண்க.

மனு. మనుః॥ "అశక్నువంస్తుశుశ్రూషాం శూద్రఃకర్తుంద్విజన్మనాం। పుత్రదారాత్యయంప్రాప్తో జీవేత్కారుకకర్మభిః। యైఃకర్మభిఃప్రచరితైః శుశ్రూష్యంతేద్విజాతయః। తానికారుకకర్మాణి శిల్పానివివిధానిచ" = இருபிறப்பாள ரேவலைச்செய்யுந் திறமில்லாத சூத்திரன் மனைவி மக்களுக்குச் சீவனங் கிடையாதஆபத்தினையடைந்தபோது, தச்சவேலை, மண்வேலை, உலோகவேலை, முதலியவற்றாலாயினும் பிழைக்கலாம். நல்லஒழுக்கமுடையஎத்தொழிலால் இருபிறப்பாளர் சேவிக்கப்படுகின்றாரோ? அப்படிப்பட்ட தச்சுமுதலிய காருகவினையாயினும், பலவகைப் பட்டசிற்பம் (எனவே படமெழுதல் முதலிய கைவேலையாயினும்செய்யலாம். ஏ-று. காண்க. (சூ௧௨)

## சூத்திரன் விலக்கு.

మూ॥ విక్రీణన్మద్యమాంసాని హ్యభక్ష్యస్యచభక్షణం
కుర్వన్నగమ్యాగమనం శూద్రోపి పతితత్వమాప్నుయాత్. ॥౯౪॥

మూ॥ కపిలాక్షీరపానేన బ్రాహ్మణీగమనేనచ
వేదాక్షరవిచారేణ శూద్రోపి పతతిక్షణాత్. ॥౬౪౫॥

என்பன. சூத்திரன் ஆபற்காலத்திலுஞ் செய்யலாகாதன கூறுகின்றன.

(இ-ள்). கள், ஊன், விற்றலும், தின்னப் படாதனவற்றைத் தின்றலும், புணரத்தகாதவளைப் புணர்ந்தாலும் சூத்திரன்அப்பொழுதே கெடுகின்றான். கபிலைப்பசுவின் பால்குடித்தலினாலும், அந்தணமாதினைப் புணர்தலாலும், வேதத்தை விசாரித்தலாலும் சூத்திரன் அந்தக்கணமே நிலைதவறினவனாவான். எ-று. காண்க.

“మద్యం” =மத்தியமென்பது, பனங்கள், பலாச்சாறு, முந்திரிச்சாறு, இலுப்பைப்பூச்சாறு, பேரீச்சஞ்சாறு, தென்னங்கள், ஈச்சங்கள், முதலியவாகப் பலவகைப்படும்.

“అభక్ష్యం” = உண்ணலாகாதன. பசுவூன் முதலியன.

“అగమ్యా” = புணர லாகாதவள். அந்தணர் மாதுபோல்வாள். (௬௫௨)

சூத்திரதருமம் முற்றிற்று.

---

ఇతిశ్రీపరాశరస్మృతౌ ప్రథమాధ్యాయః॥ பராசரமிருதி முதலத்தியாயம் முற்றிற்று.

మాధవీయశ్లోకః॥ “ప్రఖ్యాతాహిపరాశరస్మృతిరిహస్మృత్యాగమాఖ్యాపనే
ధర్మావర్ణచతుష్టయీబహుమతా సాధారణార్థాభిధా। ఆద్యస్త్వాహ్నికశిష్టనామవిహి
తష్షట్కర్మ పూర్వాపరః పూర్వాధ్యాయనిరూపితం తదఖిలంవ్యాఖ్యాత్సుధీర్మాధవః॥

## அம்மாதவிய சுலோகவுரை.

மிருதிகளால்வந்த ஆசாரங்களையும் (சுருதி மிருதிகளின் கருத்து) நன்றுவிளக்குவதில் பராசரமிருதி சிறந்ததாம். அதனுள் நான்குவருணத்தருக்கும் ஒத்த பொதுச்சிறப்புத் தருமங்

கள் கூறப்பட்டன, முதல்சிட்டர்களின் நாட்கருமக்கடன் கூறப்பட்டது. வேட்டல் முதலிய அறுதொழிலும் பின் கூறப்பட்டன. இங்ஙன முதலத்தியாயத்துட் கூறப்பட்ட அவற்றினையெல்லாம் நல்லறிவினையுடைய மாதவர் உரைசெய்தனர். எ-று. காண்க.

ఇతి శ్రీమద్రాజాధిరాజ పరమేశ్వర వైదికమార్గ ప్రవర్తక శ్రీవీరబుక్కభూపాల సామ్రాజ్య ధురంధరస్య మాధవామాత్యస్యకృతౌ పరాశరస్మృతి వ్యాఖ్యాయాం ప్రథమోధ్యాయః॥

ஸ்ரீ புக்கணராயருடைய முதலமைச்சராகிய

ஸ்ரீ மாதவாசிரியர்செய்தருளிய

பராசரமிருதிவியாக்கியானம்

முதலத்தியாயம்

தமிழ்மொழிபெயர்ப்பு

